உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு"

| | | |
|---|---|---|
| மலர் ரு | ஆங்கீரச ஆண்டு கார்த்திகைத் திங்கள் 1932 ஷு நவம்பர்மீ | இதழ் கக |

## சடையன் விடையன்

[பத்திராசிரியர்]

[இது பலவான்குடி ஸ்ரீ மணிவாசக சங்கத்தின் உஉ-ம் ஆண்டு நிறைவிழாவில் 12-9-32ல் சைவத் திருவாளர் பண்டிதமணி - மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவைத் தழுவி எழுதப்பட்டது.]

முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை உள்ளக் கனிவோடு வாழ்த்தி வணங்கும் திருப்பாடல்கள் பலவற்றில் இறைவன் சடையனாகவும் விடையனாகவும் விளங்குகின்ற தன்மை விதந்தோதப்பட்டிருக்கிறது. சடையன் பிறையன்....விடையன், சடையானைச் சந்திரனோடு....விடையானை, சடையானைத் தண்மலரான் சிரமேந்திய விடையானை, சடையன் பிறையன்.... விடையன், சடையா யெனுமால்....விடையா யெனுமால் (இவை சம்பந்தர் தேவாரம்), சடையனைச் சரிகோவண....விடையனை, சடையானே சடையிடையே....விடையானே, சடையுடையான்....விடை யுடையான் (இவை அப்பர் தேவாரம்), விடையுங் கொடியுஞ் சடையுமுடையாய், விடையின் மேல் வருவானை....சடையிற் கங்கை தரித்தானை (இவை சுந்தரர் தேவாரம்), சடையானே தழலாடி....விடையானே, வெள்ளந்தாழ்விரி சடையாய் விடையாய் (இவை திருவாசகம்) என்பன போன்ற சொற்றொடர்களும் திருவாக்குக்களும் பன்னிரு திருமுறைகளில் மலிந்துள்ளன. சடையன் விடையன் என்ற சொற்கள் இவ்வாக்குக்களில் கேவலம் எதுகைக்காகவும் இறைவன் திருவுருவ வர்ணனைக்காகவும் மட்டும் ஆளப்பட்டுள்ளன வென்று கொள்வதற்கிட

மில்லை. சைவ சித்தாந்தத்திற்கு அடிப்படையான ஒரு சிறந்த கொள்கை இச்சொற் பிரயோகத்தில் பொற்கிரையின் கண் மாணிக்கம் நிகழ்வதைப் போல் மிளிர்கின்றது. இதை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

ஒரு மேஜையின் மேல் ஒரு புத்தகம் இருக்கிறது. புத்தகத்துக்கு மேஜை ஆதாரமாகவுள்ளது. மேஜையின்றேல் புத்தகம் கீழே விழும். புத்தகம் மேஜையினுடைய ஆதாரத்தைப் பெற்றிருக்கிறது. இந்த நிலையில் மேஜைக்கு ஆதாரப் பொருள் என்றும், புத்தகத்துக்கு ஆதேயப் பொருள் என்றும் பெயர். இஃதேபோல் தொன்னையில் நெய்யிருந்தால், தொன்னை ஆதாரப் பொருள் ; நெய் ஆதேயப் பொருள். இறைவன் சடையில் கங்கையும் திங்களும் இருத்தலால், சடை ஆதாரப்பொருள் ; கங்கையும் திங்களும் ஆதேயப் பொருள்கள். விடையின்மீது இறைவன் இருத்தலால் விடை ஆதாரப்பொருள், இறைவன் ஆதேயப் பொருள். கங்கைக்கும் திங்களுக்கும் ஆதாரமாகிய சடைக்கு இறைவனே ஆதாரமாகையால் அவைகட்குப் பரம ஆதாரப்பொருளாக இறைவன் விளங்குகிறான். அவ்வாறே உலகத்தை ஆதாரமாகவுடைய விடை உலகத்துக்கு ஆதேயப்பொருளாகின்றது. விடையை ஊர்தியாகவுடைய இறைவன் உலகத்துக்குப் பரம ஆதேயப் பொருளாகின்றான். எனவே, இறைவன் பரம ஆதாரப் பொருளாகவும் பரம ஆதேயப் பொருளாகவும் விளங்குகிறான் என்ற உண்மை பெறப்படும்.

இந்த உண்மைதான் மற்றொரு வகையாகவும் கூறப்படுகின்றது. உலகத்துக்கும் உயிர்கட்கும் அப்பாலுக்கப்பாலாய் நின்று அவைகட்காதாரமாய் இறைவன் விளங்கும் தன்மை "இருநிலனும் விசும்பும் விண்ணும் எழுலகும் கடந்து அண்டத்து அப்பால் நின்ற பேரொளியை" என்பது போன்ற திருவாக்குக்களாலும், உலகத்துக்கும் உயிர்கட்கும் உள்ளே நின்று அவைகட்காதேயமாய் இறைவன் விளங்கும் தன்மை "விறகிற்றீயினன் பாலிற்படு நெய்போல், மறைய நின்றுளன் மாமணிச்சோதியான்" என்பது போன்ற திருவாக்குக்களாலும் இனிது விளங்கும். இவ்வுண்மையையே மேல் நாட்டுத் தத்துவ நிபுணர்கள் the doctrines of transcendence and immanence என்று கூறுகிறார்கள்.

இனி, சடையன் விடையன் என்ற சொற்களிலுள்ள வேறு சில நுட்பங்களை ஆராய்வாம். இறைவனது சடையிலுள்ளவை கங்கையும் திங்களும். இவைகளை இறைவன் சடையில் வைத்துள்ள பெருமை நோக்கற்பாலது. கங்கை உமாதேவியாரின் கைவிரல் வியர்வையாகத் தோன்றிப் பெருவெள்ளமாகி அண்டங்களையழிக்கத்தலைப்படவும், அரியயனாதிதேவர்கள் வேண்டவும், சிவபெருமான் தனது சடையில் அதை ஏற்றுக் கங்கையின் ஆற்றலை யொடுக்கினார் என்பது சிவபராக்கிரமம் கங்காதரமூர்த்தி வரலாற்று லறியலாகும். இதிலிருந்து இறைவனது அளவிலாற்றலும், அவன் உலகத்தின் மீது வைத்துள்ள பெருங்கருணையும் விளங்கும். தக்ஷனது சாபத்தால் கலைகள் பதினைந்தும் குறையப்பெற்ற சந்திரன், இறைவன் கருணையை நாட, இறைவன் அருள் கூர்ந்து எஞ்சியுள்ள ஒரு கலையோடு நின்ற சந்திரனைத் தனது சடையிலணிந்து மீண்டும் கலைகள் வளரவும் தேயவும் இருக்குமாறு பணித்த செய்தி

சிவபராக்கிரமம் சந்திரசேகரமூர்த்தி வரலாற்றுவடிவியலாகும். இதிலிருந்து இறைவன் அளவற்ற ஆற்றலுடையவனுயினும் அளவற்ற கருணையுமுடைய வனுயுள்ள தன்மை புலப்படும். இஃதேபோல் தருமவிடை, ஆன்மவிடை, மால்விடை என்ற மூவகைப் பெற்றியுடைய விடையை இறைவன் ஊர்தி யாகக்கொண்டு ஆதேயப் பொருளாகும் தன்மையும் நோக்கற்பாலதே. சிவ பராக்கிரமத்துள் இடபாரூடமூர்த்தி வரலாற்றிலிருந்து விடை ஆதாரமாக வும் இறைவன் ஆதேயமாகவும் இருந்தபோதிலும் இறைவனது ஆற்றலும் பேரருளுமே விளங்குகின்றன.

இந்த நுட்பம் திருவாசகத்தில் நீத்தல் விண்ணப்ப முதற் செய்யுளில் மிக அழகு பெறக்கூறப்பட்டுள்ளது. ஆன்மாக்களுள்ளே ஆதேயப்பொரு ளாய் இறைவன் விளங்குவது "கடையவனேனைக் கருணையினுற் கலந்தாண்டு கொண்ட விடையவனே" என்பதிலிருந்தும், ஆன்மாக்களுக்கு ஆதாரபூத மாயும் இறைவன் கருணை கூர்ந்து விளங்கும் தன்மை அதே பாட்டில் ஈற்றடி யில் "சடையவனே தளர்ந்தேன் எம்பிரான் என்னைத் தாங்கிக் கொள்ளே" என்பதிலிருந்தும் நன்கு புலப்படும். திருஞான சம்பந்தப் பெருமான் திருவாக்கிலும் ஓரிடத்தில் இதைக் காணலாகும். விஷந்தீண்டிய தனது நாய கனது பிரிவாற்றுமைக்கு வருந்தும் வணிகப் பெண்ணின் துயரை இறை வனுக்கு விண்ணப்பிக்கும் புகலிவேந்தர்,

"சடையா யெனுமால் சரண்நீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவளுள் மெலிவே"

என்கிறுர்.

"ஆதாரப் பொருளாகிய சடையாய் என்னுங்கால் நீயே சரணம் என்னை ஆதரித்துக் காப்பாற்று என்பாள், ஆதேயப் பொருளாகிய விடையாய் என்ற வுடன் அதற்கு ஆதாரமாகிய தன தான்மா நிலை கலங்கியிருத்தலால் அஞ்சி மருண்டுவிழ்வாள், குவளைக் கண்ணியாம் அருட்சக்தியை மருவி கருணை வெள்ளம் மடையிற் பாய்ந்தது போன்று திருமருகலில் வீற்றிருக்கும் இறை வனே இப்பெண் உள் மெலிந்து புழுங்குதல் நீதியோ" எனக்கூறிக் காழிப் பெருந்தகை இவ்வுண்மையை விளக்கியுள்ள சிறப்பை நோக்குக. இவ்வாறே ஏனைய பிரயோகங்களிலும் இந்நுட்பத்தை உய்த்துணரலாம். எனவே, சடை யன் விடையன் என்ற சொல்லடுக்கில் சைவ சித்தாந்தத்தின் அடிப்படை யான கடவுளின் தன்மை மிக அழகாகப் பொருந்தியிருக்கிறது. இதைப் போன்ற வேறு நுட்ப விடயங்களில் நமது நண்பர்கள் அடிக்கடி சிந்தையைச் செலுத்துவார்களாக.



# திருநெல் வெண்ணெய் சாசனம்

[தி. கு. கி. நாராயணசாமி]

குறிப்பு:—கீழ்க்காணும் சாசனம் நடுநாட்டுத் தலங்களில் ஒன்றாகிய திருநெல்வெண்ணெய்த் தலத்துக் கோயில் மண்டபத் தென் சுவரிலுள்ளது. இப்பட்டய முலத்தை (380 of 1908) அரசாங்கத்தார் இன்னும் வெளியிடவில்லை. இச்சாசனம் இரண்டாம் குலோத்துங்கனுடையது. இதன் காலம் கி. பி. 1136. சிவஞான சித்தியார் ஆசிரியரான அருணந்தியார் பிறப்பிடம் திருத்துறையூர். அவ்வூர் பிடாரர் ஒருவர் வேண்டுகோட்கிணங்கி இந்த தானம் ஏற்பட்டது கவனிக்கத்தகுந்தது. சாசனவல்லுநர்க்கு வெட்டியுள்ள சிவானந்த மகாமுனிகள் அருணந்தியார் பெயரோவென்ற ஐயப்பாடுமுண்டு. மற்றும் இதில் மலாடு, முனைப்பாடி, ஈசன் பெயர் தூய தமிழ் ஒலிபெற்றிருப்பது, அரசன் சைவத்தின்பாற் காட்டிய அன்பு, அவனது அரி அணை வர்ணனை முதலியன கவனிக்கத்தக்கன.

(1) ஸ்வஸ்தி ஸ்ரீ பூமெவி வளர திருப்பொந் மார்வு புணர நாமெவுகலை மகள் நலம் பெரிது சிறப்ப விசைய

(2) மாமகள் வெல்புயத்திருப்ப குசையிக் செல்வி யெண்டிசை விளங்க திருபர் வந்திறைஞ்ச நிலில

(3) மடந்தை யைத்திருமணம் புணர்ந்து சீர்வளர்தரும் மணிமுடி கவித்தென மணிமுடி சூடிமல்

(4) லைஞாலத்துப் பல்லுயிற் கெல்லாமெல்லை யிலிந்பமியல பினிலெய்த வெண்குடை

(5) ட நிழற்றச் செங்கொலொச்சி செம் பொந் வீரஸிம்ஹாஸநத்துப் புவன முழுது டையாய[ள]ர

(6) டும் விற்றிருந்தருளிய கொராஜகெஸரிபன்மரான சக்[கு]வத்தி க[ள்] ஸ்ரீ குலோத்துங்க சே

(7) ா[ழ] தேவர்க்கு யாண்டு மூன்றாவது விக்கிரம சோழபுரத்துக் கோயில் வள்ளால் அபிஷேகம

(8) ண்டபத்து செம்பொன் வீரசிம்மாஸனத்து திருமுத்துப் பந்தலின் கீழ் எழுந்தருளி யிருந்து செ

(9) சய்யத் திருவாய் மொழிந்தருளின்படி மலாடான ஜனநாத வள நாட்டு கூறுக்கை கூற்றத்து

(10) நெல்வெண்ணை பொற்குடம் குடுத்தருளிய மஹாதேவற்கு செல்ல வேண்டு நிபந்தங்களுக்கு இறுப்

(11) பதாக ராஜராஜ வளநாட்டுத் திருமுனைப்பாடியான ராஜேந்திர சோழவளநாட்டு மாதா தேயங் குலொத்து

(12) ங்க சொழ சதுர்வேதி மங்கல நாடுங் கூடினபடியே வெற்றுக் கிற்றுநாட்டு இடையாற்று நாட்டுப்

(13) பனைப்பாக்கத்து நிலத்திலே பதிற்று வேலி நிலம் தேவதான இறையிலியாக யிட்டு கலிகடிந்த

(14) சோழ நல்லூரென்னும் திருநாமத்தால் வேறு பிரிக்கப் பெற வேண்டுமென்று திருத்துறையூர் பிடாரர்ஸி (15) வாநந்த மஹாமுனிகள் காட்ட இக்கோயில் சிவப்பிராமணன் சைவாசாரியன் (16) காசிபன் நம்பிகுமரன் அண்டநாயகன் நமக்குச் சொன்னமையில் இன்நா (17)ட்டு இடையாற்று நாட்டுபனேப் பாக்கத்து தேரிக்கு கிழக்கு இடையாற்றெல்லைக் * * * *

குறிப்பு:—இதன் தொடர்ச்சி மண்டப கிழக்குச் சுவரிலிருக்கிறது. இந்த இடம் இருள் சூழ்ந்த யிடமாதலின் படி எடுக்கப்படவில்லை.

# சிவஞானபோத விளக்கம்

[கி. குப்புச்சாமி முதலியார்]

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

மேல் பதினோராஞ் சூத்திரத்துள் ஜீவன் முத்தராவார் நீங்காத அன்போடு ஆண்டவன் திருவடியில் அறிவு இச்சை செயல்களைச் செலுத்துபவர் என்று கூறியவர், அந்த ஜீவன் முக்தர்க்கே அறிவு இச்சை செயல்கள் ஒரு கால் புறத்துச் செல்லுமாயின், அம்மூன்று குணங்களும் செல்லுகின்ற இடம் இவை யென்பது உணர்த்தவேண்டியவர் வாக்கிற்கும், மனத்திற்கும் அப்பாற்பட்ட இறைவனைப் பத்தியினல் இதுகாறும் துதித்து வந்தது போலல்லாது, வாக்கு மனத்தாலும் நன்ருக உணருமாறு கண்டு வழிபடும் விதம் இதுவென்று அறிவுறுத்துவாராய் இப்பன்னிரண்டாஞ் சூத்திரத்துள்,

“செம்மலர் நோன்ருள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே.”

என்று அருளினர். இதன் பொருளாவது, செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா - (நீங்காத அன்போடு ஆண்டவன் திருவடியை அடைந்த ஜீவன் முக்தனுவான்) சிவந்த தாமரை போன்று விரிந்து காணப்பட்ட முதல்வனது பிறவிப் பிணிக்கு மருந்தாகிய நல்ல திருவடிகளைச் சேரவொட்டாது அயர் வினை யுண்டாக்கும், அம்மலங்கழீஇ - இயற்கையினையுடைய ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மல அழுக்கினை ஞான நீரால் கழுவி, அன்பரொடு மரீஇ - அவ்விதம் தம் போன்றே நீங்காத அன்பு செய்யும் மெய்ஞ்ஞானி களுடன் கலந்து கூடி, மாலற நேயம் மலிந்தவர் வேடமும் - மல மயக்கம் நீங்குதலால் மிக்க அன்புடைய அவரது திருவேடத்தையும், ஆலயந்தானும்- சிவாலயத்தையும், அரனென - முதல்வனென்றே கண்டு, தொழும் - வழி பட்டு வாழ்வன் என்பதாம்.

இதில் ‘அம்மலம் கழீஇ’ என்று கூறியதால் அறிவு செல்லுமிடமும், ‘அன்பரொடு மரீஇ ’ என்றதால் இச்சை செல்லுமிடமும், ‘தொழும்’ என்ற தால் செயல் செல்லுமிடமும் கண்டோம். ஆதலால், சிவன் முத்தர்க்கு இம்

மூன்று குணங்களும் புறத்துச் செல்லுமாயினும், ஏனைய உலக அறிவில் செல்லாது என்பதுங் கண்டோம்.

இனி, ஜீவன் முத்தராவார், இறுதியாக முன்னர்ச் செய்ய வேண்டுவது இதுவென உணர்த்துவார், ஈண்டு "ஆணவம், மாயை, கான்மியம் என்னும் மலங்களைக் களைக" என்றனர். ஆயின் முன்னரே பத்தாஞ் சூத்திரத்துள் இறைபணியார்க்கு 'மலமாயை தன்னொடு வல்வினையின்றே' என்று கூறி யிருத்தலால், பாச நீக்கம் அப்போதே ஒழிந்ததாயிற்று. அதன் பயனாக, மெய்யுணர்ந்து நிட்டை கூடிய பிறகு, அம்மும்மலங்களைக் களைக என்றது எவ்விதம் என்பாரை நோக்கி, 'அவைதாம் ஞானத்தை யுணர்த்தாது அஞ் ஞானத்தை யுணர்த்தும் ஆதலான்' என்றனர். அதாவது, அம்மலங்கள் மூன்றும் நிட்டை கூடினவரிடத்தும், ஏதேனும் ஒரு வழியால் நுழைந்து, அவர்களை மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாகிய பழைய விபரீத உணர்வினை மேல் படுத்துவனவாதலால், அது அந்நிட்டை கூடி னார்க்கு ஆகாது என்று மேற்கொண்டனர். அவ்விதம் அம்மும்மலங்களும் அஞ்ஞானத்துக்கு ஏதுவாய் வந்து நுழையும் விதமும், அது அஞ்ஞானி களுக்கு ஆகாமையும் எடுத்துக் காட்டி ஏதுவை வலியுறுத்துவார்,

> " புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமு
> மண்முதன் மாயைகாண் மாயையுங்—கண்ணிய
> வஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமு மிம்மூன்று
> மெய்ஞ்ஞானிக் காகா விடு. "

என்று கூறினர். இதன் பொருளாவது, புண்ணிய பாவங்களை யுண்டாக்கும் விருப்பு வெறுப்புகளாகிப் பொருந்துகின்ற இந்தக் கன்மமலமும், மண் முதல் மாயா தத்துவம் கடைசியாகக் காணப்படுகின்ற இந்த மாயா மலமும், சுட்டி யறியக்கூடியதாகிய விபரீத உணர்வினை யுண்டாக்கும் இந்த ஆணவ மலமும் என்று சொல்லப்படுகின்ற மூன்று மலங்களும் மெய்ஞ்ஞானிகளுக்கு ஆகா தனவாதலால், இம்மூன்று மலங்களையும் விட்டு ஒழிவாயாக என்பதாம். ஏனெனில் மேற்கூறிய வண்ணம் எல்லா மதங்களும் பற்றறும்படி துடைத்து அதற்கு வேறாகிய ஞானத்தை யடைந்தார்க்கும் உடம்பு உள்ள அளவும் பிராரத்த வினையானது அவ்வுடம்போடு கூடி நிற்றலால், அவ்வினை அம் மெய்ஞ்ஞானியர்க்கும் ஓரோரிடத்துப் பழக்க மிகுதியால் இங்குளி என்னும் பெருங்காயம் இருந்த குடுக்கையானது அப்பெருங்காயம் நீங்கிய விடத் தும், அதன் வாசனை விட்டு நீங்காதது போல் வந்து தாக்கி, அதன் சார்பாக விருப்பு வெறுப்புக்கள் என்கின்ற இரண்டினையும் உண்டாக்கும். அவ்விருப்பு வெறுப்புகளாகிய இரண்டும் உண்டாகியவிடத்து மெய்ஞ்ஞானத்தால் சிவத்தையே பார்த்திருப்பார்க்கு நிலம் முதல் மாயை ஈறாகிய பொருள்கள் வந்து தோன்றும். அவ்விதம் அவை தோன்றவே அவற்றைச் சுட்டியறிவதா கிய விபரீத வுணர்ச்சி மேற்பட்டதாகி மெய்யுணர்வினைக் கீழ்ப்படுத்திப் பிற விக்கு வித்தாகி விடும். இவ்விதம் மூன்று மலங்களும் அறிவின் குறைவு கண்டு, மேற் சொல்லிய முறையானே வந்து தலைப்படு மென்றனர். இம் மூன்று மலங்களும் சிவபோகப் பெருவாழ்வை யடையவொட்டாது செய்வன

வாதலால் 'மெய்ஞ்ஞானிக்கு ஆகா' என்றனர். அன்றியும் இவற்றைத் தோன்றும்பொழுதே நடையாவிடில்,

"இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த விடத்து."

என்றபடி, பின்னர் தீங்கு விளைக்கும் என்பார், 'விடு' என்றார். ஆயின், மூன்று மலங்களும் அஞ்ஞானத்தை யுணர்த்து மென்று கூறிய இவர், இவ்விடத்து ஆணவமல மொன்றே அஞ்ஞானங் காட்டும் என்பது பொருந்தாது என்பார்க்குக் கூறுவதுபோல், அவ்வஞ்ஞானத்தைக் காட்டுதல் மாயை கன்மம் ஆகிய மலங்களுக்கும், ஆணவமலச் சார்பாகிய செயற்கை யறிவேயன்றி இயற்கை யறிவன்று. ஆனல் ஆணவமலத்துக்கோ அவ் வஞ்ஞானத்தை யுணர்த்துதல் இயற்கை யாகும் என்னும் அறிவினைப் புகட்டுவார், முதலில் கூறுமிடத்துப் பொதுவாகவும், பின்னர் கூறுமிடத்துச் சிறப்பாகவும் கூறினர்.

இனி, மேல் கூறியபடி மூன்று மலங்களையும் அறவே களைந்தார்க்கு அதன் பின்னர் செய்பக் கடவது இது என்று உணர்த்துவார்,

"இனிச் சிவபத்தர்களோடு இணங்குக"

என்றனர். அதாவது, முதல்வனைப் பத்தியினல் ஒருபோதும் மறவாது துதித்து அவனது திருவடியையடைந்தபெரியாரோடு நட்புச்செய்தல்வேண்டுமென்றும், அவரல்லாத மற்றையரோடு நட்புச்செய்தலாகாதென்றும் அறிந்தோம். உறவென்பதும், பகையென்பதும் ஒழித்து எல்லா உயிர்களையும் தம் மகவெனப் பார்க்கும் செல்வக் கடவுள் தொண்டர்க்கு இவ்விதம் சிலரிடத்து விருப்பும், சிலரிடத்து வெறுப்பும் செய்துகொண்டு வேறுபட்டு நிற்றல் சால்புடைமை யாகுமோ என்னும் ஐயத்தை நீக்குவதற்கு,

"அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவ ராகலான்"

என்றனர். அல்லாதார் எவ்விதம் அஞ்ஞானத்தை யுணர்த்துவர் என்பதை யறிந்துகொள்வதற்கு,

"தெய்வ மென்பதோர் சித்த முண்டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின
ஆத்த மானர் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாக வேதியரும்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமயவாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலேந்தனர்."

என்னும் திருவாக்கே போதும். அன்றியும், மூன்று மலங்களும் ஒரு உயிர்க்கு அஞ்ஞானத்தை யுணர்த்துதல் இலக்கு வாய்த்த இடத்தி லாகும்.

அவ்வாறு அல்லாது இலக்கு வாயாத இடத்தும் வாய்க்கும் விதம் செய்து கொண்டு தம்மைப்போன்று ஆகும் வண்ணம் விபரீத உணர்வி னிடத்தே செல்லும்படி செலுத்திவிடுவா ராதலால் சிவபத்தி யில்லாத அஞ்ஞானிகள் இம் மும்மலங்களினுங் கொடியராவர். அஞ்ஞானிகளாகிய அவர்களை அம்மும் மலங்களுக்கு அஞ்சுவதைக் காட்டிலும் அதிகமாக அஞ்சி அவரை விட்டு ஒழிதலே அறிவுடைமைக்குத் தகுதி யென்பதாம். ஆயின் சிவபத்தியில் லாதாரோடு இணங்காது இருத்தல் ஒன்றே யமையுமே, சிவபத்தர்களோடு இணங்கவேண்டு மென்பது எதற்கு என்னும் ஐயத்தை நீக்கித் தாம் எடுத்துக்கொண்ட ஏதுவை வலியுறுத்துவார்,

> "மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்
> சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வை—மறப்பித்துப்
> பத்த ரினத்தாய்ப் பாலுணர்வி னாலுணரு
> மெய்த் தவரை மேவா வினை."

என்று கூறினர். இதன் பொருளாவது, மும்மலங்களும் நீங்கிய முதல்வன் காட்டியும், கண்டும் உபகரித்து நிற்கும் அத்துவித நிலையை மறவாது கடைப்பிடித்துத் தமது ஞானநிலையை இழுக்கச் செய்து தீயநெறிக்கண் கொண்டு சென்று மலங்களா லாகிய பிறவிக் குழியில் வீழ்வித்துத் துயரஞ் செய்பவ ராகிய அன்பிலாரோடு தொன்றுதொட்டுப் பழகிவந்த கூட்டுறவு அறும்படி, அம்மறப்பினை மாற்றி ஞானக் கண்ணினை உதவிப் பிறவிக் குழியி னின்றும் எடுத்து நன்னெறியில் செலுத்தி வாழச் செய்யும் சிவபத்தரது கூற்றிலே பேரன் புடையராய் அவ்வன்பு சார்பாக விளங்கும் சிவஞானக் கண்ணால் அந் நிலையைக் கடைப்பிடித்து உணரப்பட்ட மெய்த்தவசிக ளாயினாரை எல்லா அநத்தங்களுக்கும் மூலமாய் வந்து தோன்றிச் சிவபத்த ரல்லாதாரது கூட்டுறவைப் பயப்பிக்கும் பிராரத்த வினைகள் வாதியாவாம் என்பதாம்.

எனவே, வீட்டுணர்வு ஈதென்று நிலைகாட்டும் சிவபத்தர்களோடு கூடினா லல்லாமல், வினை பற்றுக்கோடாகப் பிறவிகள்தோறும் பழகிவந்த சிறப் பில்லா ராகிய அஞ்ஞானிகளது கூட்டுறவு நீங்காமையின், அச் சிவபத்தர்க ளது கூட்டுறவு உண்மையாகவே வேண்டும் என்பதாம்.

இனி, இவ்வாறு அன்பரொடு கூடினார்க்கு அக்கூடலை நிலை பெறுத்துவ தாகச் செய்யக் கடவது இது என்று காட்டுவார், 'இனிப் பத்தரது திரு வேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுவா னெனக் கண்டு வழிபடுக என்றது.'

ஏனெனில், ஆடல் பாடல் அழகு ஆகிய மூன்றையும் கருவிக ளாக்கொண்டு உள்ள காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை சாந்து அணிகலன் முதலாயின அவரை விரும்பும் காமுகரை வசிகரப்படுத்தி இன்பஞ் செய்வதுபோல, மெய்புணர் வுடையாரைக் காட்சி மாத்திரையில் வசிகரித்து இன்பத்தை யுண்டுபண்ணுதல்பற்றிப் பத்தரது திருவேடத்தை யும், சிவாலயத்தையும் என்று உபகரித்தனர். இவ்வுவமையை,

"சேலும் கயலுந் திளைக்கும் கண்ணார் கொங்கையிற் செங்குங்குமம்
போலும் பொடியணி மார்பு இலங்கு மென்று புண்ணியர் போற்றிசைப்ப"

என்னும் சேந்தனார் திருப்பல்லாண்டினும் காணுதல்கூடும். மேலும் திரு வேடத்தின் இயல்பு இதுவென உணர வேண்டின்,

"தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையு நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொல்
மேய செவ்வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே."

"சிந்தை யிடையறா வன்புந் திருமேனிதனி லசைவுங்
கந்தை மிகையாங் கருத்துங் கையுழவாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவுபொலி திருநீறு
மந்தமிலாத் திருவேடத் தரசு மெதிர்வந் தணைய."

"கண்டக வுணியக் கன்றுங் கருத்திற்பரவு மெய்க்காதற்
றொண்டர் திருவேடநேரே தோன்றிய தென்று தொழுதே."

என்னும் பெரியபுராணத் திருச் செய்யுள்களாலும் அறிதல் கூடும்.

இது கேட்ட வாதிகள், மெய்யுணர்வினை யுடையார்க்கு, பிரிப்பு இன்றி எவ்விடத்தும் பரமேசுவரன் என்று காண்டலே பொருத்த முடைமையாக இருக்கவும், திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய நின்ற திருத்தாண்டகத்துள்,

"இரு நிலனாய்த் தீயாகி"

என்று எங்கும் சிவபெருமான் எழுந்தருளி யிருப்பவன் என்பதனாலும், திரு வுருத்தாத்துள் திருவென்பது இல்லாமல், உயிருடைய பொருள், உயிரில் லாப் பொருள் எவையுந் தனித் தனியாக எடுத்து ஓதி வழிபாடு கூறுதலா லும், பத்தாது திருவேடத்தையும், சிவாலயத்தையும் பரமேசுரன் என்று கண்டு வழிபடுக என்று பிரித்துக் கூறியது பொருந்தாது போலும் என்பா ரது ஐயத்தை நீக்குவதற்கு, 'அவன் மற்றிவ்விடங்களில் பிரகாசமாய் நின்றே அல்லாத இடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்' என்றனர். அதாவது அம் முதல்வன் எவ்விடத்தும் வியாபகமாய் நிற்பனாயினும் மேற்கூறிய இவ்விரண் டிடங்களில் மாத்திரம் தயிரில் நெய்போன்று நின்று நிலைபெற்று மற்ற இடங் களில் பாலில் நெய்போல வெளிப்படாது நிற்பன் என்பதாம்.

இனி, இவ்விரண்டிடத்தும் பிரகாசமாய் நிற்கும் விதமும், மற்றைய இடங்களில் அப்பிரகாசமாய் நிற்கும் விதமும் எடுத்துக் காட்டுவார்,

"தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தன்னு ளிருத்தலாற்—றன்னுணரு
நேசத்தர் தம்பால் நிகழுந் ததிநெய்போற்
பாசத்தார்க் கின்றாம் பதி"

என்று கூறினர். இதன் பொருளாவது, சிந்திப்பதற்கு இல்லாதவனாய, பரம் பொருளே உலகத்துள்ள ஆன்மாக்கள் தன்னை யறியும்பொருட்டு, திருநீறு கண்டிகை முதலிய திருவேடமாகிய தனது திருவடிவத்தைத் தனது அன்

பர்க்குக் கொடுத்தலாலும், அவ்வன்பர் தமது சிவோகம் பாவனையாலும் அறியத் செய்தலாலும், அவ்விதம் ஒரு குறியின் கண்ணின்று உணரும் அவ்வன்பரைத் தனது வியாபகத்துள் இருக்க இருத்துதலாலும், குறியும் இறந்து நின்று தன்னையுள்ளவாறு உணரும் அவ்வன்பரிடத்துத் தயிரிடத்துக் காணப்படும் நெய்போல விளங்கித் தோன்றும். மேற்கூறிய தகுதியெல்லாம் இல்லாத பாசக்கட்டு உடையாராகிய ஆன்மாக்களிடத்துப் பாலினிடத்தே மறைந்து நிற்கும் நெய்போல விளங்காது நிற்கும் என்பதாம்.

இதுகேட்டார், சங்கம வடிவிற்குச் சொல்லிய இயல்பெலாம் இல்லாத தாவர வடிவில் மந்திர சாந்நித்யம் உள்ள இடத்தல்லாமல் பிரகாசமாய் நிற்றல் கூடாது என்னலும், அவரை நோக்கிச் சிவாலயத்தினிடத்தும் இறைவன் பிரகாசமாய் நிற்றலை வலியுறுத்துவார்,

“கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே
றுண்டல்போல் நின்றங் குளதாமாற்—கண்டவுருத்
தானதுவா யன்றுனன் தானதுவாய்த் தோன்றுனே
தானதுவாய்க் காணுந் தவர்க்கு”

என்று கூறினர். இதன் பொருளாவது, விறகினிடத்தே யுள்ள தீயானது கடைகோலால் கடைந்த இடத்து அவ்விறகுக்கு வேறாய் விளங்கித் தோன்றும். அவ்விதமல்லாதவிடத்து விளங்கிக் காணப்படாததுபோல, உயிர்களுக்குப் புத்திமுத்தி யளித்தற்பொருட்டு தாவர வடிவினிடத்துக் கலப்பினுல் அதுவே தானுகியும், அப்பொருளல்லாது வேறு பொருளும் ஆகின்ற இயல்பினையுடைய முதல்வன், அதுவே தானுகக் காணுதார்க்குத் தம்மால் அறியப்பட்டதொரு மந்திரசானித்யம் இல்லாதவிடத்து, அவ் வடிவினிடத்து விளங்காது நின்றும், மந்திரசாந்நித்யம் உள்ள விடத்து விளங்கிக் காணப்படும் பொருளாம். அவ்விதமல்லாது, அவ்வடிவத்தையே அவனுகக் காணப்பெறும் உண்மைத்தவமுடையார்க்கு அப்பெற்றியனேயாய் விளங்கித் தோன்றுவன் என்பதாம்.

இவ்வுவமையினை, “விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போல், மறையநின்றுளன் மாமணிச் சோதியான், உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினல், முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே” என்னுந் திருநாவுக்கரசர் திருவாக்காலும் அறிதல்கூடும்.

இனிமேல் மூன்று அதிகரணங்களால் ஜீவன் முத்தருக்குரிய ஆசாரம் உணர்த்தியவிடத்து, அவர்க்கே உண்டாவனவாகிய இலக்கணமாதலால், அது வாத முகத்தால் ஓதாது “களைக”, “இணங்குக”, “வழிபடுக” என்று விதி முகத்தால் ஓதுவது எதற்கு? என்னும் ஐயத்தை நீக்குவதற்கு எழுந்தது நான்காமதிகரணம் என அறிக. அதாவது, இவ்விடங்களின் வழிபடுக என்றமையால், இவ்விடங்களாவன:—பத்தாது திருவேடமும், சிவாலயமும் என மேற்கூறியனவாகும். ஏனெனில், நரம்பு நாடி முதலானவற்றைத் தானது வாய் வரும் புருடன் அவையாகாவாறு, அப்புரு டனு மாகலான் என்பதனுல் என்க. அதாவது நரம்பு, நாடி, இறைச்சி, என்பு முதலியதாதுக்களினிடத்து

வேற்றுமையில்லாமல், அது அதுதானய் வருகின்ற உயிர்முன் இந் நூலில் கூறியபடி,

"நாடியோ என்போ நரம்பு சிக்கோழையோ",

என்று இவ்விதம் பைம்மறியாப் பார்ப்பார்க்கு, நரம்பு நாடி முதலியவை யாகாது அவற்றின் வேறுமாயினாற்போல, உயிர்க்கு உயிராகிய அம்முதல் வனும் ஜடம், சித்துக்கள் என்னும் எல்லாப் பொருளினும், அது அதுதானகி யும் நிற்பன். ஆதலால், அது அது தானகநிற்பதைக் காணும் காட்சிபற்றி, எய்திய வழிபாடானது, அது அது அல்லனய் நிற்றலைக் காணுமிடத்து, வழிபாடு எய்தாமையின் அவ்விடத்தும் அடைவிக்க வேண்டுதலான், இனி இவ்விடங்களின் வழிபடுக என விதித்துக் கூறியதாகும். அவ்விதமாயும், முதல்வனுக்கு இவ்வியல்பு எல்லாப் பொருள்களிடத்தும் உண்டாதலால் எவ் விடத்தும் வழிபாடு விதித்தலே பொருத்தமுடையது என்னும் ஐயத்தை நீக்கி வலியுறுத்துவார்,

"அதுவிது வென்ற தருவல்லான் கண்டார்க்
கதுவிது வென்றதையு மல்லான்—பொதுவதனி
லத்துவித மாத லகண்டமுர் தைவமே
யத்துவிதி யன்பிற் றொழு"

என்று கூறினர். இதன் பொருளாவது, முதல்வன் உயிர்ப்பொருள், உயிரில் பொருள் என்கின்ற எல்லாவற்றினும் நிற்கும் நிலைமையினை யறியப் பெற் றோர்க்குக் கண் அருக்கன்போல, அதுவென்றும் இதுவென்றும் பிரித்துக் கூறப்பட்ட பேதநிலைமையனும் அல்லனய், உடல் உயிர்போல் அதுவே யென்று ஓதப்பட்ட அபேதநிலைமையனும் அல்லனய், குணமும் குணியும் போல் அதுவாகிய இது பிரிக்காது சொல்லப்பட்ட பேதாபேத நிலைமை யனும் அல்லனய், அறிவும் ஒளியும்போல், அம்மூன்றனுக்கும் பொதுமை யால் அத்துவித நிலைமையன் ஆதலால், எல்லாப் பொருள்களும் அவன் வடிவேயாக இருக்கினும், அவற்றுள்ளும் அன்பு விளையுமிடத்து வழிபடு வாயாக; அவ்வத்துவித சித்தாந்தத்தை யுறுதியெனக் கொண்டவனே யென்பதாம்.

இனி, அசுத்தமாயுள்ள உலகப் பொருள்களை யசத்து என்று கண்டு, நீங்குவதாலேயே ஞானசொரூபம் உண்டாகி அத்துவித உண்மையினை யுணர்த்துவதாக இருக்க, அவ்வுண்மை யுணருவதற்கு வழிபாடென்று வேறு விதித்தல் எதற்கோ? என்பாரை நோக்கி வழிபாடு வேண்டுமென்று வலி யுறுத்துவார்,

"வினையா லசத்து விளைதலான் ஞானம்
வினைதீரி னன்றி விளையா—வினைதீர
ஞானத்தை நாடித் தொழுவே யதுநிகழு
மானத்தா லன்பிற் றொழு"

என்று கூறினர்.

இதன் பொருளாவது, உடம்பின் கண்ணேயுள்ள பிராரத்வ வாசனை யானது உடம்பைத் தாக்குதலால், அதனுல் வரும் விருப்பு வெறுப்புக்களும்,

அதுபற்றிக் காட்சிப்படும் மண்முதல் மாயைகளும் அவைபற்றி யுண்டாகும் விபரீத உணர்வும் ஆகிய அசத்துக்கள், ஒருமுறை நீங்கிய இடத்தும் மறுபடியும் வந்து கூடித் தாமே மேம்பட்டு நிற்குமாதலால், இவற்றுக்கெல்லாம் மூலமாகிய பிராரத்வ வாசனைப் பற்றறக் கழிந்தாலல்லது, அவ்வசத்துப் பொருள்களைக் கீழ்ப்படுத்தும் மெய்யுணர்வானது மேம்படுதல் கூடாதாதலால், அப்பிராரத்துவ வாசனைப் பற்றறக் கழியும் பொருட்டு அம்மெய்யுணர்வுடைய ஞானிகளை நாடி, வழிபடவே பிராரத்துவ வினை நீங்கி மெய்யுணர்வு மேம்பட்டு நிகழும். ஆதலால் அம்மெய்யுணர் வுடையாரை வழிபடுவாயாக என்பதாம்.

அவ்விதம் பயன்பற்றி விதிக்கப்படும் வேள்வி முதலியன போல வழிபாடு பயன்வேண்டாமையாகிய இதற்கு வேண்டாவாதலால் இப்போது பின்னர்ச் செய்து அடைதல் கூடாதோ என்பாரை நோக்கி, அப்பிராரத்துவ வாசனை நீங்கும் வண்ணம் செய்யாத இடத்து உண்டாகும் குற்றமும், செய்தல் வேண்டுமென்னும் கடமையும் பின்வரும் விதம் கூறுவார்,

"தன்னை யறிவித்துத் தான்றானுச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது—முன்னவனே
தானே தானுச் செய்துத் தைவமென்றுத் தைவமே
மானே தொழுகை வலி"

என்று கூறினர். இதன் பொருளாவது, தன் உண்மையிது என்று அறியமாட்டாது குருடாய்க் கிடந்த உயிர்க்குப் பல விதத்தானும், அவ்வுண்மையைத் தெரிவித்து உணர்த்தி மிகுதியும் எளிய அவ்வுயிரை மிகுதியும் அரிய தானுகும் வண்ணம் செய்து அளித்த பெரியதோர் உதவியை அதன் பின்னரும் மறக்குமாயின், அது இதற்குமுன், அறியாமையால் மறந்த குற்றத்தினைப் போலத் தீரும் திறமுடைய ஓர் குற்றமல்ல ஆகலானும், முதல்வன் அவ்விதம் தான் தானேயாகச் செய்தாலும், இதுவரையும், தனக்கு ஓர் சுதந்தரமில்லாது முதல்வனது உபகாரத்தையே இன்றியமையாததாக அடிமையாக இருந்த உயிர் எக்காலத்தும், அவ்விதம் அடிமையேயாகும் ஆகலானும், தான் தானுச் செய்து திருவருள் செய்த அப்பெரியோனுகிய முதல்வனை வழிபடுதலே அவ்வுயிர்க்கு வலிமையுடையதென்பதாம். எனெனின், முன்னர் அறியாமையால், மறந்த குற்றம் கழுவப்படுவதொன்றென்றும், அறிந்தபின் செய்யும் குற்றம் கழுவப்படாததொன்றென்றும், அவ்விதம் மறப்பின்,

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்—உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்பது போலாம். இவ்விடத்துத் தான் தானுச் செய்தல் எதை எதைப் பற்றினும் அதுவதுவாம் உயிரானது, தன்னை யறிந்த இடத்தும், எண்குணங்களால் நிறைந்து தன் வண்ணமாக இருக்கச் செய்யும். அவ்விதம் செய்த இடத்தும் உயிர் தானும் சுவானுபவம் ஒன்றனுக்கே யுரித்து என்பார் தைவம் என்றும் "தைவமே" என்றனர். மேற்கூறிய மூன்று உதாரணங்

களானும், வழி பாட்டிற்கும், இடத்து நிகழ் பொருள் மாத்திரமல்லாது இடவிசேஷமும் பெறல் வேண்டும் என்று வலியுறுத்திச் சொல்லுவார், முறையே சிவலிங்கத்தையும், சிவபத்தர் வேடத்தையும், சிவதேசிகர்களையும் அறிந்து வழிபடும் விதம் கூறப்பட்டது.

இனி, முடிந்தது முடித்தலாகக் கூறுகின்ற மெய்கண்டார் இந்நூலைக் கேட்க வல்லவர் இவர் என்று முடித்துக் காட்டுகின்றனர்.

“ சிவமென்னு மந்தரா சிந்தைநேர் நோக்கப்
பவமின்றாங் கண்வாச கத்திற்—சிவமுண்டா
மொன்று மிரண்டு மலர்த்தார்க்கிங் கொண்குருவா
லின்றிந்நூன் மும்மை மலர்க்கு.”

இதன் பொருளாவது, தான் தானாகச் செய்த விதத்தால் சிவனென்று சொல்லப்படும் இயற்கையில் நீங்கிச் சிவமென்று சொல்லப்படும் வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தத்தை யுடைய மாணவகனே! ஒருமல முடைய விஞ்ஞான கலர்க்கும், இருமலமுடைய பிரளயா கலர்க்கும், முறையே அறிவினிடத்தே நின்று அருட் பார்வையால் நோக்குதலானும், தேவகுருவாய் முன்னின்று செய்யும் திருநோக்கம், பரிசம், வாக்கு எனப்படும் தீக்கையானும், பிறவிக் கேதுவாகிய பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்குவதால் அவ்விருவரின் வேறாகிய சகலர் என்னும் பெயரை யுடைய மும்மல முடையவர்க்கே இவ் வுலகத்து அனுபவமுடைய தேசிகரால் போதிக்கப்படும் இச்சிவஞானபோத நூல் உரித்தாகும்.

இங்கு அந்தமென்பது வேதாந்தமும், அந்ததரமென்பது சித்தாந்தமு மாதலால், அச் சித்தாந்தத்தின் பெருமையைக் கூறுவார் ‘சிவமென்னு மந்த தரம்’ என்றனர்.

பன்னிரண்டாம் சூத்திரம் முடிந்தது

பயனியல் முற்றிற்று

சிறப்பியல்பு முற்றுப்பெற்றது

சிவஞானபோத விளக்கம் முடிந்தது

திருச்சிற்றம்பலம்

---

## சிறப்புப் பாயிரம்

எந்தை சனற்குமா னேத்தித் தொழ வியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞான நூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் தாரணியோர் தாமுணரா
வேததிருட் டாந்தத்தா லின்று.



---

குறிப்பு :—இவ்விளக்கத்தை மிகச் செவ்வையாக எழுதி முடித்த உபகரித்த சைவத் திருவாளர் - கி. குப்புச்சாமி முதலியார் அவர்கட்கு நமது நன்றியையும் சைவ உலகத்தின் நன்றியையும் மகிழ்ச்சியுடன் செலுத்துகின்றோம்.—பத்திராசிரியர்.

# சொற்பொழிவுக் குறிப்புகள்

[ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ., எல். டி.]

## V

### சன்மார்க்கம்

1 உலக வழக்கில் 'சன்மார்க்கம்'=நல்லொழுக்கம். எதிர்ச்சொல்: 'துன்மார்க்கம்.' இச்சன்மார்க்க வளர்ச்சியின் அவசியம்: உலகில் அழுக்காறு, அவா, வெகுளி பெருகிவரல்; போட்டியும், அவநம்பிக்கையும், போர் முயற்சியும்; வறுமை, நிகில், துன்பம் வளர்த்துப் புலனின்ப நுகர்ச்சிக்குப் பொருள் பல தேடல். எல்லார்க்கும் கிடைக்காமையால் தொல்லை. உலகில் பெரும் பகுதி துன்பத்திலும் பயத்திலும் மூழ்கியிருத்தல். துன்பந் தீர்க்க வெறும் ராஜ தந்திரிகள் மகாநாடும் உடம்படிக்கையும் நிலைத்த பயன் தராமை. கருணையும்சிவமுமே பொருளெனத்தேராமைகாரணம். மக்களுள் சன்மார்க்கவளர்ச்சி யொன்றே பயன் தரவல்லதாம். இந்தியாவின் துன்பமும் சன்மார்க்கக் குறைவால் வந்ததே.

2 இப்பெயர்க்கு நூலாட்சி சில:—

(உ-ம்) (i) "பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக்
கசியாத நெஞ்சங் கசியக் கசிவித்து
நசியாத உண்மைச் சொரூபோதயத் துற்று
அசைவான தில்லாமை ஆன சன்மார்க்கமே" (திருமந்திரம்)

(திருமந்திரம் - ௫-ம் தந்திரம் க-வது பகுதி முழுதும் பார்க்கத்தக்கது.)

(ii) "முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறியே சரணாதல் திண்ணமே
அந்நெறியே சென்றங் கடைந்தவர்க் கெலாம்
நன்னெறி யாவது நமச் சிவாயவே" (அப்பர்)

(iii) ஞான பாதத்தைச் 'சன்மார்க்கம்' என்னும் வழக்கு.

(சிவஞான சித்தி முதலிய சித்தாந்த நூல்களில் காணலாம்.)

(iv) "அங்கை கொடுமலர்தூவி அங்கமது புளகிப்ப
அன்பினா லுருகி விழிநீர்
ஆறாக ஆறாத பத்தியின தாவேச
ஆசைக் கடற்குள் மூழ்கிச்
சங்கர சயம்புவே சம்புவே எனவுமொழி
தழுதழுத்திட வணங்கும்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்க னேனையுந்
தண்ணருள் கொடுத் தாள்வையோ......." (தாயுமானார்)

(தாயுமானார் திருப்பாடல் - சிதம்பர ரகசியம் (7,8, காண்க.)

